# திருப்புகழமிர்தம்



ஆசிரியர்

## கிருபானந்தவாரி

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

சாதாரண

பங்குனி

உ

முருகா

## சந்தா நேயர்களுக்கு

பன்னிருகைப் பரமன் திருவருள் துணைகொண்டு நமது 'திருப் புகழமிர்தம்' சென்ற முப்பத்தைந்து ஆண்டுகளாகக் கடித விலை யேற்றம், கூலிகள் கூடுதல் ஆகிய பல இடர்ப்பாடுகளினிடையே மாத இதழாகச் சமயத் தொண்டு புரிந்து வந்தது. சென்ற பல ஆண்டுகளில் எவ்வளவோ மாற்றங்கள் ஏற்பட்டுவிட்டன. ஆக இனியும் நமது 'திருப்புகழமிர்த'த்தை மாதமொரு முறை வெளியிடு வது இயலாததாகி, இந்தப் பங்குனி இதழுடன் மாத வெளியீடு நிறைவு பெறுகின்றது.

சென்ற இதழ்களில் வெளிவந்த அறிக்கைகளில் தெரிவித்தவாறு மூன்று மாதத்திற்கு ஒருமுறை வெளிவரும் இதழுக்குச் சந்தாத் தொகையை அனுப்பி வைத்துள்ளவர்கட்கு மட்டும் இனி இதழ்கள் அனுப்பி வைக்கப்படும்.

ஷெ மூன்று மாத மொருமுறை வெளிவரும் இதழுக்கு இனியும் சந்தாத் தொகை ரூபாய் நான்கை (உள்நாடு மட்டும்)யும் நமது காரி யாலயத்துக்கு நேரே மணியார்டர் மூலம் அனுப்பி வைக்க வேண்டு கிறோம். ஒரு குறிப்பிட்ட அளவு இதழ்களே அச்சிடப்படுமாதலால் உடனே அனுப்பி வைப்பது நலம்.

(உத்தரவுப்படி) மானேஜர்

**திருப்புகழமிர்தம் காரியாலயம்**
**89, சிங்கண்ண செட்டித் தெரு,**
**சிந்தாதிரிப் பேட்டை, சென்னை-2**

## சென்னையில் ஆசிரியர்

சென்னை சைதாப்பேட்டை ஆஸ்பத்திரி ரோடில் உள்ள ஸ்ரீராம பக்த ஆஞ்சநேய சுவாமிதேவஸ்தானத்தில் 22-3-71 திங்கட்கிழமை முதல் 3-4-71 சனிக்கிழமை வரை நாள்தோறும் மாலை 7-00 மணி முதல் ஆசிரியர் திருமுருக கிருபானந்தவாரி யவர்களால் ஸ்ரீராமா யணச் சொற்பொழிவுகள் நிகழும். அன்பர்கள் கேட்டுப் பய[ன்] பெறலாம். (மானேஜர்)

எமது வெளியீடுகள் பின்வருமிடங்களில் கிடைக்கும். நேரில் பெற வசதியுள்ள அன்பர்கள் பெற்றுக் கொள்ளலாம்.

1. டாக்டர் R. L. ஹநுமந்தன்,
   8, தெற்குமாசி வீதி, மதுரை.
2. திரு. R. முருகானந்தன்,
   அம்பிகா டெக்ஸ்டைல்ஸ்,
   829, ரங்கே கவுடர் வீதி, கோயம்புத்தூர்.
3. ஸ்ரீ T. S. கணபதி சாஸ்திரிகள்,
   ஷண்முக விலாஸ் புத்தகக்கடை, திருச்செந்தூர்.

உ

ஓம் குஹாய நம.



# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

## மலர் 35

சாதாரண ஷூ சித்திரை மீ முதல் பங்குனி மீ வரையில்
(1970 ஏப்ரல் மீ முதல் 1971 மார்ச்சு மீ வரை)



திருப்புகழ்த் தொண்டன்

## கிருபானந்தவாரி



திருப்புகழமிர்தம் காரியாலயம்
89, சிங்கண்ண செட்டித் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை :: சென்னை-2

1 9 7 1

முருகா

# திருப்புகழமிர்தம்

பொருளடக்கம்

## திருப்புகழ்

(பதவுரை, பொழிப்புரை, விரிவுரை, கருத்துரையுடன்)

## திருவருணை



### கற்பு—சிறுகதைகள்

## மகாபாரதம்—சாந்தி பருவம்
## மோக்ஷதர்மம்



## அநுசாஸன பருவம்



## பிற கட்டுரைகள்

**Statement about ownership and other particulars about the newspaper "THIRUPPUGAL AMIRTHAM" Madras. as required to be published under Section 19D Sub-Section (b) of the Press and Registration of Books Act.**

(Form IV See Rule 8)

| | | |
|---|---|---|
| 1. | Place of publication | Madras |
| 2. | Periodicity of its publication : | Monthly |
| 3. | Printer's Name : | K. M. John |
| | Nationality | Indian |
| | Address : | Jeevan Press, 8, Titarappa Mudali Street, Triplicane, Madras-5. |
| 4. | Publisher's Name. | Sri M. Madhusoodana Sivam |
| | Nationality : | Indian |
| | Address . | 89, Singanna Chetti Street, Chintadripet, Madras-2. |
| 5. | Editor's Name. | Sri Kirupanandavari, |
| | Nationaiity : | Indian |
| | Address : | 89, Singanna Chetti Street, Chintadripet, Madras-2. |
| 6. | Name and Address of individuals who own The newspaper and Partners or shareholders holding more than one percent of the total capital. | M. Madhusoodana Sivam; 89, Singanna Chetti Street, Chintadripet, Madras-2. |

I, M. Madhusoodana Sivam, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Dated : (Sd) M. MADHUSOODANA SIVAM

15th March 1971 Publisher.

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"




| மலர் 35 | சாதாரணஹூ— பங்குனிமீ மார்ச், 1971 | இதழ் 12 |
|---|---|---|


## திருப்புகழ்

### திருவருணை

பாலாய் நூலாய் தேனாய் நீளாய்
பாகாய் வாய்சொற் கொடியார்தாம்
பாடா வாடா வேடா வாலே
பாடா யீடற் றிடைபீறுந்
தோலா லேகா லாலே யூனு
லேசூழ் பாசக் குடில்மாசு
தோயா மாயா வோயா நோயால்
சோர்வாய் மாளக் கடவேனோ
ஞாலா மேலா வேதா போதா
நாதா சோதிக் கிரியோனே
ஞானா சாரா வானோர் கோனே
நானா வேதப் பொருளோனே
வேலா பாலா சீலா காரா
வேளே வேடக் கொடிகோவே
வீரா தாரா ஆரு தாரா
வீரா வீரப் பெருமாளே.

## பதவுரை

ஞாலா மேலா=பூமியில் உயர்ந்தோட்கெல்லாம் உயர்ந்தவரே! வேதா போதா=பிரம தேவருக்கு உண்மையை உபதேசித்தவரே! நாதா=தலைவரே! சோதி கிரியோனே=சோதி மலையாகிய அருண கிரிப் பெருமானே! ஞான ஆகாரா=அறிவு மயமான ஆசார மூர்த்தியே! வான் ஆள் கோனே=வானுலகை ஆளுகின்ற முதல்வரே! நானு வேத பொருளோனே=பலவகைப்பட்ட வேதங்களுக்கும் உட்பொருளாய் விளங்குபவரே! வேலா=வேலாயுதத்தையுடையவரே! பாலா=குழந்தையே! சீல ஆசாரா=தூய வடிவினரே! வேளே=செவ்வேட் பரமனே! வேட கொடி கோவே=வேடர் மகளாகிய வள்ளிநாயகியின் கணவரே! வீர ஆதாரா=வீரத்துக்கு ஆதாரம் ஆனவரே! ஆறு ஆதாரா=ஆறு ஆதாரங்கட்கும் உரியவரே! வீரா=வீரமூர்த்தியே, வீர பெருமாளே=வீரத்தைத் தரும் பெருமையிற் சிறந்தவரே! பால் ஆய்=பால் போலவும், நூல் ஆய்=இனிய தமிழ் நூல் போலவும், தேன் ஆய்=தேன் போலவும், நீள் ஆய் பாகு ஆய்=நீண்டு வருகின்ற ஆய்ந்த சர்க்கரைப் பாகு போலவும் தித்திக்கின்ற, வாய் சொல்=வாய்ச் சொல்லையுடைய, கொடியார் தாம்=கொடி போன்ற மாதர்கள் தாம், பாடா ஆடா வேள் தாவாலே=பாடி ஆடி வேட்கின்ற வலிமையினாலே, பாடு ஆய்=வேதனை யடைந்தவனாய், ஈடு அற்று=என் வலிமையற்று, இடை பீறும்=மத்தியிலே கிழிந்து போகும், தோலாலே=தோலினாலும், காலாலே=காற்றினாலும், ஊனாலே=மாமிசத்தாலும், சூழ்=சூழப் பட்டுள்ளதும், பாசம்=பற்றுக்களுக்கு இடமானதுமான, குடில்=குடிசை, மாசு தோயா=குற்றங்கள் தோய்ந்தும், மாயா=ஒளி மழுங்கியும், ஓயா நோயால்=ஒழியாத நோயினால், சோர்வு ஆய் மாளக் கடவேனோ=தளர்ச்சியுற்றும் அடியேன் இறந்துபடக் கடவேனோ?

## பொழிப்புரை

உலகில் உயர்ந்தோர்க் கெல்லாம் உயர்ந்தவரே! பிரம தேவருக்கு உண்மையை உபதேசித்தவரே! தலைவரே! ஒளி மயமான திருவண்ணாமலையில் எழுந்தருளியிருப்பவரே! அறிவு மயமான ஆசாரசீலரே! வானுலகை ஆளுகின்ற அதிபரே! பலவகையான வேதங்களின் உட்பொருளாய் விளங்குபவரே! வேலாயுதரே! குழந்தைக் கடவுளே! சீலத்தின் வடிவானவரே! செவ்வேட் பரமனே! வேடர்குலக் கொடியாம் வள்ளி பிராட்டியின் மணவாளரே! வீரத்துக்கு ஆதாரம் ஆனவரே! ஆறு ஆதாரங்களுக்கு உரியவரே! வீரமூர்த்தியே! வீரத்தைத் தரும்

பெருமித முடையவரே! பால்போன்றும், இனிய தமிழ் நூல் போன்றும், தேன்போலவும், நீண்டுவரும் ஆய்ந்த சர்க்கரைப் பாகு போன்றும் இனிக்கின்ற வாய்மொழிகளையுடைய கொடி போன்ற பொது மாதர்கள் பாடியும் ஆடியும் வேட்கின்ற வலிமையால் அடியேன் வேதனையடைந்தவனாய், என் வலிமை யற்று, இடையில் கிழிந்துபோகும் தோலாலும், காற்றினாலும், மாமிசத்தாலும். சூழப்பட்டுள்ளதும், பற்றுக்களுக்கு இட மானதுமான குடிசை; குற்றங்கள் தோய்ந்தும், ஒளி மழுங் கியும், தீராத நோயினால் சோர்ந்தும் அவமே இறந்துபடக் கடவேனோ ?

## விரிவுரை

**பாலாய் நூலாய் தேனாய் நீளாய் பாகாய் வாய்சொற் கொடியார்:—**

கொடியார்—கொடி போன்ற மாதர்கள், பெண்களின் வாயி லிருந்துவரும் சொற்கள் காமுகர்க்குப், பால்போலவும் இனிய தமிழ் நூல் போலவும், தேன் போலவும், சர்க்கரைப் பாகு போலவும் தித்திக்கும்.

நீராடாவிடில் நாறுகின்ற உடம்பு கூடக் காமுகர்க்குக் கரும்புபோல் இனிக்கும்.

மாலே விளங்கு சந்திரவாணன் வரையிடத்தே
பாலேரி பாய தேன்மாரி பெய்யநற் பாகுகற்கண்
டாலே எருவிட முப்பழச்சாற்றில் அமுதவயல்
மேலே முளைத்த கரும்போ இம்மங்கைக்கு மெய்யெங்குமே.

—சந்திரவாணன் கோவை.

**பாடா வாடா வேடா வாலே:—**

பாடா ஆடா வேள் தாவாலே. வேள்—விருப்பம்; தாவு—வலிமை. பொது மாதர்கள் ஆடவர் முன் ஆடியும் பாடியும் விரும்பச் செய்கின்ற சமர்த்தினால் ஆடவர் மயங்கித் தியங் குவர்.

**பாடா யீடற்று:—**

பாடு—துன்பம். பெரிதுந் துன்புற்று வலிமையற்றுப் போவார்கள்.

**இடை பீறுந் தோலாலே:—**

தோல் இடையில் கிழியுந்தன்மை யுடையது. இந்த வுடம்பு தோலால் மூடப்பட்டது.

"தோல்படுத்து உதிரநீரால் சுவரெடுத்து" —அப்பர்.

**காலாலே:—**

தச வாயுக்களால் சூழப்பட்டது இந்த வுடம்பு.

"தோலால் சுவர் வைத்து நாலாறுகாலில் சுமத்தி"
—கந்தரலங்காரம்.

**ஊனாலே சூழ்:—**

ஊன்—மாமிசம். மாமிசத்தால் ஆன உடம்பு.

"ஊனேறெலும்பு சீசீமலங்கள்" —திருப்புகழ்.

**பாசக்குடில்:—**

குடில்—குடிசை.

பாசபந்தங்களுக்கு உறைவிடமான உடல்.

"குரம்பை மலசலம் வழுவளு நிணமொடு
எலும்பு அணிசரி தசையிரல் குடல்நெதி
குலைந்த செயிர்மயிர் குருதியொ டிவைபல கசுமாலம்"
—திருப்புகழ்.

**மாசு தோயா மாயா:—**

குற்றம் பல உடைய உடம்பு. மாயைக்கு உறைவிட மானது.

**ஓயா நோயால் சோர்வாய் மாளக் கடவேனோ:—**

ஓய்விலலாத நோய் முதலிய துன்பத்தால் சோர்ந்து அடியேன் பிறவியின் நோக்கத்தை யுணர்ந்து உய்வுபெறுமல் வீணே மாண்டு போகலாமா? அவ்வாறு மாய்ந்து போகாமல் சிறியேனை ஆட்கொள்ள வேண்டும்.

**ஞாலா மேலா:—**

ஞாலம்—உலகம்.

"உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்பது பிங்கலம். ஆகவே உலகில் உயர்ந்தோர்கட்கெல்லாம் மேலானவர் முருகன் எனவுணர்க

**வேதா போதா:—**

வேதத்தை யுணர்ந்த பிரமதேவருக்கு உண்மைப்பொருளை உபதேசித்தவர் முருகப் பெருமான்.

**நாதா:—**

நாதன்—தலைவன்; நாதவடிவானவர் எனினும் பொருந்தும்.

தனிப்பெருந் தலைவன் முருகன். அதனால் சிவபெருமான் உபதேசங் கேட்கும்போது. "நாதா குமரா நம" என்று துதி செய்தார்.

**சோதிக் கிரியோனே:—**

சோதிமலை திருவண்ணுமலை. மாலும் அயனும் தம்மில் "நான்பரம்" நான்பரம் என்று கூறி மலைந்தபோது, இருவருக்கிடையே சிவபரம்பொருள் சோதியாய் நின்றருளினர்.

**ஞானசாரா:—**

ஞான ஆசாரா.

அறிவு மயமான ஆசார முதல்வன் முருகன்.

**வானள் கோனே:—**

வான வுலகை ஆளுகின்ற அதிபன் முருகன்.

**நானு வேதப் பொருளோனே:—**

வேதங்கள் பல.

ருக்வேதம், யஜுர் வேதம், சாமவேதம், அதர்வணவேதம், தநுர் வேதம், ஆயுள் வேதம், அர்த்த வேதம். காந்தர்வ வேதம் என்பனவாதி பல. இவைகள் எல்லாவற்றுக்கும் உட்பொருளாய் விளங்குபவன் முருகன்.

**சீலாகாரா:—**

சீலம்—ஒழுக்கம். ஆகாரம்—வடிவு. ஒழுக்க வடிவாகத் திகழ்பவன் முருகன்.

**வீராதாரா:—**

வீரத்துக்கு ஆதாரமானவன் முருகன்.

**ஆறாதாரா:—**

ஆறு ஆதாரங்கள்: மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆதாரங்கட்கும் உரியவன் ஆறுமுகப் பெருமான். ஆறுதாரங்களிலும் விளங்குபவன். ஆறு ஆதாரங்களே ஆறுபடை வீடுகள்.

## கருத்துரை

அருணையண்ணலே! அடியேன் அவமே யழியாவண்ணம் ஆண்டருள்.

## திருப்புகழ்

புணர்முலை மடந்தைமாதர் வலையினி லுழன்ற நேக
பொறியுடை லிறந்து போன தளவே துன்
புகழ்மறை யறிந்துகூறு மினியென தகம்பொ ருவி
பொருளென நினைந்து நாயெ னிடர்தீர

மணமுணர்மடந்தை மாரொ டொளிர்திரு முகங்க ளாறு
மணிகிரி யிடங்கொள் பாநு வெயிலாசை
வரிபர வநந்த கோடி முனிவர்கள் புகழ்ந்து போத
மயில்மிசை மகிழ்ந்து நாடி வரவேணும்

பணைமுலை யரம்பைமார்கள் குயில்கிளி யினங்கள்போல
பரிவுகொ டுகந்துவேத மதுகூறப்
பறைமுர சநந்த பேரி முறைமுறை ததும்பநீசர்
படைகட லிறந்துபோக விடும்வேலா

அணிசுக நரம்புவீணை குயில்புற வினங்கள்போல
அமளியில் களங்களோசை வளர்மாது
அரிமகள் மணங்கொடேகி எனதிட ரெரிந்துபோக
அருணையின் விலங்கல் மேவு பெரும ாளே

### பதவுரை

பணைமுலை அரம்பை மாதர்=பருத்த தனங்களை யுடைய தேவ மாதர்கள், குயில் கிளி இனங்கள் போல=குயில் கிளி இவைகளின் கூட்டம்போல் நின்று, பரிவு கொடு=அன்பு கொண்டு, உகந்து= அன்புடனே, வேதம் அது கூற=வேதங்களை ஓதவும், பறை முரசு அநந்த பேரி=பறையும் முரசும் கணக்கில்லாத பேரி வாத்தியங் களும், முறை முறை ததும்ப=முறை முறையே பேரொலி எழுப்ப வும், நீசர் படை கடல் இறந்து போக விடும் வேலா=இழிந்தோர் களாகிய அசுரர்களின் சேனைக் கடல் மடிந்துபோகுமாறு செலுத்திய வேலாயுதரே! அணி சுகம்=அழகிய கிளி, நரம்பு வீணை=நரம்புள்ள வீணை, குயில்=குயில், புறவு இனங்கள் போல=புறுக் கூட்டம்போல, அமளியில்=படுக்கையின்மீது, களங்கள் ஓசை வளர் மாது=கண்டத் தின் ஓசையை எழுப்பும் பெண்மணியும், அரிமகள்=திருமாலின் புதல்வியுமாகிய வள்ளிபிராட்டியை, மணம் கொடு ஏகி=திருமணஞ் செய்து கொண்டு சென்று, எனது இடர் எரிந்து போக=அடியே னுடைய துன்பங்கள் எரிந்து அழிய, அருணையின் விலங்கல் மேவு— அருணை நகரின் மலையில் வீற்றிருக்கும், பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! புணர் முலை மடந்தை=நெருங்கியுள்ள கொங்கைகளை

யுடைய பெண்களின், மாதர் வலையினில் உழன்று=அழகாகிய வலை யில் அலைபட்டு, அநேக பொறி உடல்=விதி வசப்பட்ட அநேக உடல்கள், இறந்து போனது அளவு ஏது=மாய்ந்து போனவை களுக்குக் கணக்கு உண்டோ? உன துபுகழ் மறை அறிந்து=தேவரீ ருடைய புகழைச் சொல்லும் வேதாகமங்களை உணர்ந்து, இனி எனது அகம் கூறும்=இனிமேல் என் உள்ளம் துதி செய்யும், பொன் ஆவி பொருள் என நினைந்து=பொன் ஆவி பொருள் என்ற இம்மூன் றையும் விரும்பித் திரியும், நாயென் இடர் தீர=அடியேனுடைய வருத்தங்கள் ஒழிய, மணம் உணர் மடந்தை மாரொடு ஒளிர்=உம் மைக் கூடுதலையே தமது உணர்ச்சியாகக் கொண்ட தேவசேனை வள்ளியுடன் விளங்குகின்ற, ஆறு திருமுகங்கள்=ஆறு திருமுகங் களில் திகழ்கின்ற, மணிகிரியிடங் கொள்=மணிக் கிரீடங்களில் கொண்ட, பாநு வெயில்=சூரிய வொளி, ஆசை வரி பரவ=திசைகளி லெல்லாம் ரேகைகளைப் பரப்பி வீச, அநந்த கோடி முநிவர்கள் புகழ்ந்து போத=எண்ணில் கோடி முநிவரர்கள் புகழ்ந்து வர, மயில் மிசை மகிழ்ந்து=மயிலின்மீது மகிழ்ந்து, நாடி வரவேணும்=என் னிடம் நாடி தேவரீர் வர வேண்டும்.

## பொழிப்புரை

பருத்த தனங்களை யுடைய தேவமாதர்கள், குயில், கிளி இவைகளின் கூட்டம்போல் நின்று, அன்புடனே மகிழ்ந்து, வேதங்களைக் கூறவும், பறை வாத்தியம், முரசு வாத்தியம், கணக்கில்லாத பேரி வாத்தியம் என்ற இவைகள் முறைமுறை யாக முழங்கவும், இழிந்த அசுரர்களின் கடல்போன்ற சேனை கள் மடிந்து போமாறு செலுத்திய வேலாயுதரே! அழகிய கிளி, நரம்புடன் கூடிய வீணை, குயில், புறு என்ற இவைகளின் கூட் டங்கள் போல், படுக்கையின்மீது, கண்டத்து ஓசையை எழுப்பு கின்ற பெண்மணியும், திருமாலின் புதல்வியுமாகிய வள்ளி பிராட்டியைத் திருமணஞ் செய்துகொண்டு சென்று, அடியே னுடைய துன்பங்கள் சாம்பராகி விலக, திரு அருணபுரியின் மலையில் எழுந்தருளியுள்ள பெருமிதமுடையவரே! நெருங்கி யுள்ள தனங்களையுடைய பொது மகளிரின் அழகு வலையில் சிக்கி அலைந்து, விதிவசப்பட்ட அநேக உடம்புகள் இறந்து போனவைகட்குக் கணக்கே யில்லை. உமது புகழைக் கூறும் வேதாகமங்களை இனி எளியேனுடைய உள்ளம் உணர்ந்து துதிசெய்யும்; பொன் உயிர் பொருள் என்ற மூன்றின்மேல் ஆசைகொண்டு திரியும் அடியேனுடைய வருத்தங்கள் ஒழிய, தேவரீரைக் கூடுதலையே தமது உணர்ச்சியாகக் கொண்ட

வள்ளி தெய்வயானையுடன் விளங்குகின்ற ஆறு திருமுகங்களின் மணிமகுடங்களில் ஒளி, சூரிய ஒளிபோல் திசைகளில் எல்லாம் ரேகைகளைப் பரப்பி வீச, எண்ணில் கோடி முனிவரர்கள் புகழ்ந்துவர, மயில்மீது மகிழ்ந்து அடியேன் முன் என்னை விரும்பி வந்தருள வேண்டும்.

## விரிவுரை

**புணர்முலை மடந்தை:—**

இளமைத் தன்மையால் நெருங்கியுள்ள தனபாரங்களை யுடைய பெண்கள்.

"கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்து
எய்த்திடை வருந்த எழுந்து புடை பரந்து
ஈர்க்கிடை போகா இளமுலை மாதர்"

—போற்றித்திருஅகவல்—திருவாசகம்

**மாதர் வலையினி லுழன்று:—**

மாதர்—அழகு.

"மாதர்ப் பிறைக் கண்ணியானை" —அப்பர் தேவாரம்.

பெண்களின் அழகாகிய வலையில் சிக்கி வறிதே அலைந்து திரிந்து.

**அநேக பொறி யுடலிறந்து போன தளவேது:—**

பொறி—எழுத்து, அயன் எழுத்துடன் கூடிய உடம்பு.

மெய், வாய், கண், நாசி, செவி என்ற ஐம்பொறிகட்கு இடமாகிய உடல் எனினும் பொருந்தும்.

இந்த உடம்புகள் தோன்றி மறைந்ததற்கு எண்ணிக்கையே யில்லை.

"எழுகடல் மணலை யளவிடினதிகம்
எனதிடர் பிறவி யவதாரம்" —திருப்புகழ்.

**உன் புகழ் மறை யறிந்து கூறும்இனி எனதகம்:—**

இனி எனது அகம் உன் புகழ்மறை யறிந்து கூறும்.

என் உள்ளமானது உமது புகழைக் கூறும் வேதாகமங்களை இனி யுணர்ந்து துதி செய்யும்.

**பொனுயி பொருளென நினைந்து நாயே னிடர்தீர:—**

பொன் உயிர் பொருள் என்ற மூன்றையும் விரும்பித் திரிந்த அடியேனுடைய இடர்தீர தேவரீர் வரவேணும்.

**மணமுணர் மடந்தைமார்:—**

முருகனையே மணம்புணர வேண்டித் தவஞ்செய்து அடைந்தவர்கள் தேவயானையும், வள்ளிபிராட்டியும்.

**மணிகிரி யிடங்கொள்:—**

கிரீடம் என்ற சொல் சந்தத்தை நோக்கி, கிரியிடம் என வந்தது.

**பாநுவெயில்:—**

முருகனுடைய ஆறு மணிமகுடங்கள் சூரிய ஒளி வீசு கின்றன.

**ஆசை வரிபரவ:—**

ஆசை—திசை.

"அணங்கார் பாகனை ஆசை தோறும்" —கம்பராமாயணம்.

முருகவேளின் மணிமகுடங்களின் பேரொளி திசைகள் முழுவதும் பரவி விளங்குகின்றது.

**அநந்தகோடி முநிவர்கள் புகழ்ந்து போத:—**

கந்தவேள் எழுந்தருளி வரும்போது எண்ணில் கோடி முநிவரர்கள் அப்பெருமானைப் புகழ்ந்து கொண்டு உடன் வரு வார்கள்.

**மயில்மிசை மகிழ்ந்து நாடி வரவேணும்:—**

மயிலின்மீது மகிழ்ந்து ஆரோகணித்து, அடியேனை விரும்பி என்முன் வந்து காட்சி தந்து ஆட்கொள்ள வேண்டும்.

"…………சதகோடி
இருடியர்கள் புகழ்ஞான பெருமாளே"—(சுடரனைய) திருப்புகழ்.

**பணைமுலை யரம்பை மாதர் குயில் கிளியினங்கள் போல பரிவு கொடுகந்து வேத மதுகூற:—**

முருகப் பெருமான் சூராதியவுணர்கள் மீது போருக்குப் புறப்பட்டபோது, குயில்கள் கிளிகளின் குழாம்போன்ற அழகிய தேவ மாதர்கள் அன்பும் ஆனந்தமும் கொண்டு வேதமொழி யால் முருகனைப் புகழ்ந்து பாடினார்கள்.

**அணிசுக நரம்புவீணை குயில்புற வினங்கள் போல அமளியில் களங்க ளோசை வளர்மாது:—**

வள்ளி நாயகி பஞ்சணையில் முருகனிடம் இருந்தபோது, அவருடைய கண்டத்தில் கிளி, வீணை, குயில், புறா முதலிய ஓசைகள் ஒலித்தன.

# கற்பு

## கற்பரசி

கற்புக்குக் கனலும் அஞ்சும். இந்தப் பாரதப் பூமியின் பெருமைக்கு ஆணிவேராக நிற்பவர்கள் கற்புடைய தாய்மார்கள்தாம். "பிறங்கு திருமனையறத்தின் வேராக விளங்கு திருவெண்காட்டு நங்கை" என்று சேக்கிழார் பெருமான் செப்புகின்றார்கள். கற்புடையவர்கள், அன்புடையவர்கள், அறிவுடையவர்கள் என்ற மூவரும் இந்த நாட்டின் மூலதனங்கள். இம் மூவரும் தேவரும் போற்றும் பெருமையும் அருமையும் படைத்தவர்கள். இம் மூவரில் முன்னே நிற்கின்றவர் கற்புடைய காரிகையரே யாவார்.

"பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்" என்கின்றார் திருமூலர்.

தீயில் பலவகையுண்டு, ஞானக்கினி, பூதாக்கினி, யாகாக்கினி, யோகாக்கினி, ஜாடராக்கினி, தவாக்கினி, காமாக்கினி, கோபாக்கினி இன்னோரன்ன பல அக்கினிகள் உள. இவைகள் எல்லாவற்றுள்ளும் சிறந்தது—மகிமையுடையது—சக்திவாய்ந்தது கற்புக்கனல் என உணர்க. கற்புக்கனலைக் கண்டு பிற அக்னிகள் யாவும் அஞ்சும்; கற்புக்கனல் மிஞ்சும்.

---

"தமிழோதிய குயிலோமயி லாண்டலை யாம்புறவங்
கிளி காடையி னணிலேரளி யாங்குரல் வாய்ந்ததி செந்
தகுமாமிட றெலியார்" —திருப்புகழ்.

**எனதிட றெரிந்து போக:—**

இது அருணகிரியாருக்குத் திருவருணையில் முருகன் அருள்புரிந்த வரலாற்றைக் குறிக்கின்றது.

"அடிமை கொடுநோய் பொடிகள் படவே
அருணகிரி வாழ் பெருமாளே"

என்று மற்றொரு திருப்புகழிலும் கூறுகின்றார்.

**அருணையின் விலங்கல்:—**

விலங்கல்—மலை. அருணபுரியில் திகழும் திருமலை.

### கருத்துரை

அருணையில் உறையும் அரசே! என் இடர் தீர மயில்மீது வந்து அருள் செய்.

சந்திரமதியுடன் அரிச்சந்திரன் காசிக்குச் செல்லும்போது விசுவாமித்திரன் சூழ்ச்சியால் இடையில் நெருப்பாறு எதிர்ப்பட்டது.

அரிச்சந்திரன் அக்கினியாற்றில் இறங்க முற்பட்டான். "அடியேன் இருக்கத் தாங்கள் ஏன் துன்புறவேண்டும்'' என்று கூறி லோகிதாசன் அக்கினியாற்றில் இறங்க முனைந்தான். மகனையும் கணவனையுந் தடுத்து கற்பரசியாகிய சந்திரமதி நெருப்பாற்றில் இறங்கினள். நெருப்பு சந்தனமாகக் குளிர்ந்துவிட்டது. இதனைப் படிக்காசுப் புலவர் இனிய செஞ்சொல் மணிகளால் கூறுகின்றார்.

"முக்கணர் தண்டலை நாட்டில் கற்புடை மங்கையர் பெருமை
மொழியப் போமோ
ஒக்களரி குளிரவைத்தாள் ஒருத்தி''.

சீதாதேவி தன் கற்பின் திறத்தை உலகுக்கு உணர்த்த எண்ணினாள். இலக்குவன் மூட்டிய தீயில் ஒரு சிறிதும் அஞ்சாது இறங்கினாள். அப்பெருமாட்டியின் கற்புத்தீயின் வெப்பத்தை ஆற்றாது வெண்பஞ்சு போல் தீ தீய்ந்தது. என்னே கற்புத் தீயின் மகிமை. அடியில் வரும் பாடல்களைப் படித்து உணர்க.

நீந்தரும் புனலிடை நிவந்த தாமரை
ஏய்ந்ததன் கோயிலே எய்துவாள் எனப்
பாய்ந்தனள்; பாய்தலும் பாலின் பஞ்செனத்
தீய்ந்ததவ் வெரி; அவள் கற்பின் தீயினால்.

அங்கியான் என்னைஇவ் வரிய கற்பெனும்
பொங்குவெந் தீச்சுடப் பொறுக்கி லாமையால்
இங்கணைந்தேன் உறும் இலங்கை நோக்கியும்
சங்கியா நிற்றியோ ? எவர்க்குஞ் சான்றுளாய்.

இந்த இரு நிகழ்ச்சிகளேயன்று; மூன்றாவது ஒரு நிகழ்ச்சி நமது நெஞ்சையள்ளும். அது இது.

குலோத்துங்கன் என்ற சோழர் பெருமான் தனது நாட்டை இனிது அரசு புரிந்துகொண்டிருந்தான். அவனுடைய அரசாட்சி * அரசாட்சியுடன் நடைபெற்றது. அந்த வேந்தன் சாந்த சீலனாகவும், அதே நேரத்தில் பகைவர்கட்கு ஊழித் தீயாகவும், காட்சிக்கு எளியனாகியும், காண்டற்கு இனியனாகியும், அணுகுவாரிடம் இன்முகம் காட்டி, இன் சொல் கூட்டி, நல்லற மூட்டி; நல்லறமூர்த்தியாய் விளங்கினான்.

* அரசாட்சி—அர சாட்சி. அரனாராகிய சிவபெருமான் சாட்சியாகச் செம்மையாக நடந்தது.

மன்னன் இரவில் மாறு வேடம் புனைந்து நகர் சோதனை புரிவான். மக்கள் துயிலும் போது, தான் துயிலாது சுற்றிச் சுற்றி வருவான். கள்ளராலும், கொலைஞராலும், பகைவராலும் வரும் இடர்களை யகற்றுவான்பொருட்டு குலோத்துங்கன் இரவில் இவ்வாறு நகர் காவல் புரிவான். நடுநிசியில் எத்தகையோரும் துயிலுவர்.

நித்தநியமத் தொழிலாய் நிறையு ஞானத்து
உத்தமர் உறங்கினர்கள் யோகியர் துயின்றார்
மத்தமத லங்களிறுறங்கின; மயங்கும்
பித்தரும் உறங்கினர்; இனிப் பிறரிதென்னும்.

என்பது கம்பராமாயணம்.

உண்ணாவிரதம் இருப்பதுண்டு; உறங்கா விரதம் இருந்தோர் யாண்டும் இலர். இவ்வாறு யாரும் மயங்கும் இரவில் மன்னன் மயங்காது, தியங்காது, மக்கள் மீதுள்ள கருணை காரணமாக தேனீயைப் போல் அங்கும் இங்குமாக நடுநிசியில் உலாவுவான்.

ஒருநாள் இரவு ஒரு தெருவழியே மன்னன் சென்று கொண்டிருந்தான். நகரம் உறக்கத்தில் ஆழ்ந்திருந்தது. இருள் சூழ்ந்திருந்தது. எங்கும் ஒரே அமைதி. ஒரு வீட்டில் மட்டும் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அங்கு ஏதோ ஒரு துன்பச் சூழ்நிலை இருக்கும் என்று காவலன் கருதினான். மெல்லச் சாரளத்தில் வழியாக உற்றுப் பார்த்து நின்றான்.

அந்த வீட்டுக்குள் ஒரு கற்பரசியிருந்தாள். அவள் கணவன் சூலைநோயால் துள்ளித் துடித்துக் கொண்டிருந்தான்; மனைவி அவனை எல்லையில்லாத அன்புடன் உபசரித்துக் கொண்டிருந்தாள். அவன் வயிற்றில் வடவைத் தீயைப் போலவும், ஆலாலவிடம் போலவும், வச்சிராயுதம் போலவும் நோய் புடைய—உள்ளம் உடைய அவன் தவித்தான்.

அவன் மனைவி அவனுக்குச் சுடச்சுட வெந்நீர் தந்தும், விசிறியும் அவனைத் தன் மீது காயவைத்தும், தன் மலர்க்கரத்தால் அவனை அன்புடன் பணிபுரிந்தாள். அவள் மடியில் தலைவைத்துக் கணவன் படுத்தான். ஏதோ திருவருளால் சிறிது கண்மூடி உறங்கிவிட்டான். பிணியாளர்கள் உறங்கி விட்டால் நோயின் துயரம் தணியும். தூங்குகின்ற நேரம் அவர்கட்கு மிகவும் இன்றியமையாதது. நோயாளர்க்குத் தூக்கம் மிகவும் ஆறுதலைத் தருவது.

கற்பரசி தன் மடிமீது தலைவைத்து தூங்கும் கணவனுடைய திருமுகத்தை இமை கொட்டாது பார்த்துக் கொண்டிருந்தாள். மெல்ல

ஒரு கரத்தால் அவன் முகத்தில் உள்ள வியர்வை மாற விசிறிக் கொண்டிருந்தாள்.

“சிவபெருமானே ! பவரோக வயித்தியநாதா? அப்பர் பெருமானுடைய சூலேவலி தீர்த்த அருளாளா ! கருணேக்கடலே! உமையொருபாகா! நினைப்பவர் துயர்தீர்க்கும் நிமலா! என் கணவனுக்கு வந்த இந்த நோயைத் தீர்த்தருள். கடைக்கண்ணுல் பார்த்தருள். அப்பனே! ஏழைபங்காளா! இவர் தாங்கொணுத துயரால் தவிக்கின்ருரே. என்னுல் இதைப் பார்க்கவே முடியவில்லேயே. கருணே செய்.” என்று வேண்டிக் கொண்டு துதி செய்தாள். அவள் கண்களிலிருந்து நீர் ஆருய்ப் பெருகியது. கண்ணீர் நிலத்தில் ஓட அந்த நீரில் அவளுடைய பவளவிரல் கோலம் போட்டுக் கொண்டிருந்தது. இந்த அவலக் காட்சியைக் கண்ட அரசன் நீண்ட ஒரு பெருமூச்சு விட்டான்.

அப்போது ஒரு திடுக்கிடும் நிகழ்ச்சி நிகழ்ந்தது. சிறு பாயில் கற்பரசியின் ஓராண்டுப் பாலகன் உறங்கிக் கொண்டிருந்தான். குழந்தையின் முகம் முழுநிலாவைப் போல் அழகு ஒழுகிக் கொண்டிருந்தது. பவளக் கொடியால் செய்தவை போன்ற கரங்களும் கால்களும் உடைய பச்சிளம் சிறுவன் பையக் கண்விழித்து எழுந்தான். குழந்தைகட்கு அச்சம் என்பதே கிடையாதல்லவா? குழந்தை சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு அடுப்புக்குத் தவழ்ந்து சென்ருன். கஞ்சி போடுவதற்காகக் கற்பரசி அடுப்பில் தீயை மூட்டியிருந்தாள். திகுதிகு என்று தீ எரிந்து கொண்டிருந்தது. குழந்தை தன் பவளமன்ன பிஞ்சுக்கரத்தை தீயில் நீட்ட முனேந்தது.

கற்பரசி இந்த அபாயத்தைக் கண்டு திடுக்கிட்டாள். உள்ளம் பதறினுள். தீயில் வைத்தால் சுடும் என்று குழந்தையறியாது. சட்டையணிந்து கொண்டிருக்கின்ற குழந்தை தீயில் கை வைத்தால் தீப்பிடித்துக் குழந்தை மாண்டு போகும். குழந்தை பெறுதற்கரிய பெருஞ் செல்வம்; 10 மாதம் சுமந்து பெற்ற புத்திர மாணிக்கம்; குலத்தை விளக்கும் குலவிளக்கு; இன்பத்தின் கருவூலம்: மழலே மொழியால் மகிழவைக்கும் மணியாரம். இப்போது நான் எழுந்து குழந்தையை யெடுத்துக் காப்பாற்ற வேண்டும். அப்படி யெழுந்தால் கணவனுடைய தூக்கங்கெடும். மீளவும் நோய்த் துன்பத்தால் கணவன் துயர முறுவான். எழுந்தால் மகன் பிழைப்பான்; ஆனுல் கணவன் அல்லல்படுவான். இந்த இரண்டில் எது தக்கது என்று அவள் ஒரு கணம் சிந்தித்தாள். குழந்தைகள் பல பிறக்கும்; கணவன் ஒருவன் தானே. கணவனேக் காட்டிலும் குழந்தை உயர்ந்த பொருளாகாது” என்று கருதி முடிவு செய்தாள். இவளுடைய மனநிலேயை யுணர்ந்த மன்னன் பதறினுன்.

குழந்தை தீயில் கையை நீட்டும் போது கற்பரசி "தீக்கடவுளே! நீயறிய நான் தூய கற்புடையவளாக இருப்பது உண்மையானல் என் மணிவண்ணனுக்கு நீ சந்தனம் போல் குளிர்ந்திரு" என்ருள். கற்புத்தீக்கு அஞ்சிய வெந்தணல் சந்தனமாகக் குளிர்ந்து விட்டு நீரில் கைவைத்து விளையாடுவதைப் போல் தீயில் பொற்கரத்தை நீட்டி விளையாடிக் கொண்டிருந்தது. அக்கினி குழந்தையைச் சுட வில்லை. இந்த அளவிடற்கரிய அற்புதத்தை மன்னன் கண்டான்; இறும்பூது கொண்டான். கண்ணை நம்ப முடியவில்லை. இமைத்து இமைத்து உற்று உற்றுப் பார்த்தான். அடுப்பில் எரிவது தீப்பிழம்பு தான். சந்தேகமேயில்லை, ஆ! ஆ! நெருப்பும் நீராகிவிட்டதே. கற்புக் கனலைக் கண்டு கனல் அஞ்சுகின்றது. என்னே கற்பின் வலிமை. இத்தகைய உத்தமக் கற்பரசி என் நகரில் வாழ் கின்ருளா ? நானே பாக்கியசாலி. என் அரசு நல்லரசு" என்று எண்ணித் தன் அரண்மனை சேர்ந்தான்.

மறுநாள் குலோத்துங்கன் அரசவையில் அரியணை மீது வீற்றி ருந்தான். அவன் அருகில் அமைச்சர்களும், புலவர்களும், அறிஞர் களும், நீதிபதிகளும் பிறரும் அமர்ந்திருந்தார்கள்.

மன்னன் "அமைச்சர்களே! மதிமிகு புலவர் பெருமக்களே! நான் ஒரு காட்சியைக் கண்டேன். நெருப்பு நீராகி விட்டது. இது எப்படி ஆகும்? இயற்கைக்கு இது மாறுபட்டதல்லவா? இதனை ஆய்ந்து கூறுவோருக்குத் தக்க பரிசு தருவேன்" என்ருன். இதைக் கேட்ட அவையோர் திகைத்தார்கள். நெருப்பு நீராகுமா? இரும்பு கரும்பாகுமா? பூனை ஆனையாகுமா? "அரசே! நீர் கண்டது ஏதாவது செப்படி வித்தையாக இருக்கும். நெருப்பு நீராவது எங் கும் எக்காலத்திலும் நிகழாத ஒன்று. மேருமலை கடலில் மிதந்தால் நெருப்பு நீராகும்" என்ருர்கள். சிலர் அரசருக்கு ஏதோ மதிமயக் கம் போலும்; பித்தக் கோளாறு போலும்" என்று தமக்குள் பேசிக் கொண்டார்கள்,

சபையில் பரபரப்பு ஏற்பட்டது. மன்னர் ஒரு போதும் புனைந்துரையோ பொய்யுரையோ புகலமாட்டார். அரசர் அறிஞர் பெருமான். உத்தம வித்தகர். எனினும் கனல் புனலாமோ? இது வெயிலவன் மேற்கு உதித்தது போல் இருக்கின்றதே, என்று பல வாறு சிந்தித்தார்கள்.

அப்போது அங்கு தலைமை பூண்டிருந்த ஒட்டக்கூத்தர் கூறுவாராயினர்.

அனலைக் கதிர்மதி கண்ணுயமைந்த அரனடியை
மனமெய் யுரையால் வழிபடும் மாமதி மன்னவனே

தினமெய் வளரும் செழுந்தமிழ் ஓங்குநின் திருநகரில்
கனலைப் புனலாக்கும் கற்புடைமாது தன் கட்டுரையே.

அனல் ஐ கதிர் மதி நெருப்பு சிறந்த சூரியன் என்ற மூன்று சுடர்களையும் முக்கண்ணுகவுடைய சிவபிரானுடைய திருவடியை, மனம் உடம்பு சொல் இவைகளால் வழிபடுகின்ற சிறந்த அறிவுடைய அரசர் பெருமானே! நாள்தோறும் உண்மை வளர்கின்ற—செழுமையான தமிழ் மொழி ஓங்குகின்ற உமது திருநகரிலே, உத்தமமான ஒரு கற்புக்கரசியின் வாய்மொழி நெருப்பை நீராகுமாறு செய்யும்.

புலவர் கூரிய சீரிய அறிவுக்கண்ணுல் அன்றிரவு நிகழ்ந்ததைத் தெளிவாகப் பார்த்துக் கூறிய இப்பாடலைக் கேட்ட மன்னன் மன மிக மகிழ்ந்தான்.

கூத்தருடைய நுண்ணறிவின் திறத்தை மெச்சிப் பாராட்டினுர். பின்னர் தான் அன்றிரவில் கண்ட காட்சியை விளக்கியுரைத்தார். இந்த சம்பவத்தைக் கேட்டோர் வியப்புற்ருர்கள்.

கற்பரசியின் மகிமையையும், அவள் வாக்குக்கு அஞ்சி அனல் புனலான திறத்தையும், இத்தகைய புண்ணியவதி தோன்றிய இந்தப் பாரத நாட்டின் பெருமையையும் எண்ணி எண்ணி இதயம் மகிழ்ந்தார்கள்.

உடனே அரண்மனையின் அரசமருத்துவர் கற்பரசியின் இல்லத்துக்குச் சென்ருர்—அவளுடைய கணவனுக்குச் சிறந்த முறையில் சிகிச்சை நடந்தது. திருவருளால் குணம் அடைந்தான். கற்பரசிக்கு அரசமரியாதை நடந்தது. கணவனுக்கு ஒன்றும் புரியவில்லை. நமக்கு ஏன் அரசர் இத்தனை மரியாதை செய்கின்ருர் என்று எண்ணினுன். அரசன் கற்பரசியால் கனல் புனலான அற்புதத்தைக் கூறக்கேட்டு அற்புதம் அடைந்தான்.

உ

முருகா.



## அநுசாஸன பர்வம்

(256-ஆம் பக்கத் தொடர்ச்சி)

### அந்தணரது சிறப்பு.

யுதிட்டிரர், "பாரதரே! வணக்கத்துக்கு உரியவர் யாவர் ? நீர் யாரை மிகுதியாக விரும்புகின்றீர் ? இம்மையிலும் மறுமையிலும் நன்மையைத் தருவது எது ?" என்று கேட்டார்.

பீஷ்மர், "அரசனே! வேதத்தை ஓதும் தவத்திற் சிறந்த அந்தணர்கள் வணக்கத்துக்கு உரியவர்கள். ஒழுக்கமும் சீலமும் உண்மையும் அன்பும் அடக்கமும் இன் சொல்லும் உடைய அந்தணர்களை எப்போதும் நான் விரும்புகின்றேன்; உத்தமமான ஓரந்தணனை உண்பித்தவன் ஆயிரம் பேரை உண்பித்தவனாவான்.

இந்த உலகில் புலவர்கள் பலர் உளர்;[1]சூரர்கள் பலர் உளர். *வீரர்கள் பலர் உளர்; ஆனால் வறியவர் முகங்கோணாமல் அகமலர்ந்து தானஞ்செய்பவர் மிகச் சிலரே யாவார். இவ்வாறு உத்தம பாத்திரத்தில் தந்தது இம்மைக்கும் மறுமைக்கும் உதவுகின்றது. பெண்களுக்குக் கணவனே தெய்வம்; குழந்தைகட்குத் தாய் தந்தையர் தெய்வம், மாணுக்கர்கட்கு ஆச்சார்யன் தெய்வம், அரசனுக்கு அந்தணன்தான் தெய்வம். அரசன் எப்போதும் வேதம் ஓதும் வேதியர்களைக் காப்பாற்றவேண்டும். வேதியர்கள் ஆசாரத்துடன் வேதம் ஓதுவதால் வானம் பொழியும்; வானம் பொழிந்தால் செல்வம் பெருகி, அரசன் தானம் பொழிவான். மக்கள் மகிழ்வார்கள். ஆதலால் நீ காதலால் அந்தணர்கட்கு அன்பு செய்" என்று கூறினார்.

### வேதங்களின் வாக்கு

"மகனே! நான்கு வேதங்களும் ஒன்றோடொன்று உரைசெய்து கொண்டன.

---

[1] சூரன்—எடுத்ததை முடிப்பவன்.

*வீரன்—வலிமை யுள்ளவன்.

ரிக்வேதம்:—"இல்லறத்தில் இருந்து அக்கினிகோத்திரம் செய்து கொண்டிருப்பவனுடைய புண்ணியத்தை, மாலை நேரத்தில் வந்து உபசரிக்கப்பெருத அதிதி வாங்கிக்•கொள்ளு கின்ருன்."

யஜுர் வேதம்:—"அந்தணன் வயிற்றில் விழுந்த அன்னம் வற்றுவதில்லை. அது வேள்வியிலும் மேலானது."

ஸாமவேதம்:—"அதிதிகளை திருப்தி செய்வதனுல் எல்லாப் பாவங்களையும் போக்கிக் கொள்ளலாம். தாய் தந்தை அந் தணன் என்ற மூவர்களைக் கொன்ற பாவம் மட்டும் அதிதி பூஜையாலும் போக்கிக் கொள்ள முடியாது."

அதர்வணவேதம்:—"சினம் உள்ளவன் செய்யும் யாகம் தவம் தானம் முதலியவற்ருல்வரும் பயனை யமன் கவர்ந்து போகின்ருன். ஆதலால் சினமுள்ளவன் செய்யும் செய்கை பயன்படாமல் போகின்றது."

ஆதலால் அதிதி பூஜை, அந்தண பூஜை, தாய் தந்தை அந் தணரை ஆதரித்தல், சாந்தம் என்ற இந்த நான்கும் உயர்ந் தவை" என்ருர்.

### அந்தணன்—பதிவிரதையின் சிறப்பு

"தருமனே! ஒருசமயம் இந்திரன், அக்கினி, சூரியன், இந்தி ராணி என்ற நால்வர்கள் ஒரு காலியான குடத்தைக் கண்டார் கள். இந்திரன் எனது ஆட்சியில் காமக் குரோதமில்லாத அந்தணர்களைக் காண்கின்றேன். இது உண்மையானுல் இந்தக் குடத்தில் கால்பங்கு நீர் நிரம்புவதாக!' என்ருன்; அதில் அது படி நீர் நிரம்பியது; அக்கினி, "அந்தணர்கள் உண்ணுத இடத் தில் நான் உண்பதில்லை என்ற சத்திய வாக்கினுல் குடம் கால் பங்கு நிரம்புவதாக" என்ருன். குடம் கால்பங்கு நிரம்பியது; சூரியன், "பசுக்களுக்காகவும் அந்தணர்களுக்காகவும் ; நான் அதிக வெப்பத்தை உண்டுபண்ணுமல் இருக்கின்றேன், இது உண்மையானுல் குடம் கால்பங்கு நிரம்புக" என்ருன். குடம் கால்பங்கு நிரம்பியது. இந்திராணி, நான் உள்ளத்தாலும் உரையினுலும் செயலாலும் என் கணவனுன இந்திரனை அவமதிப்பதில்லை. இது உண்மையானுல் குடம் நிரம்புக" என்ருள். குடம் நிரம்பியது." என்று பீஷ்மர் கூறிஞர்.

(தொடரும்)

முருகா

# மதுரை ஸ்ரீ திருப்புகழ்ச் சுவாமிகள்

மதுரை ஸ்ரீ திருப்புகழ்ச்சாமி ஐயர் என்ற மாமுனிவர் சிறந்த முருகனடியார். இவர் இராமநாதபுரத்திலே சிறந்த அந்தணர் குலத்திலே அவதரித்தவர். இராமநாதபுரம் சமஸ்தானத்துடன் தொடர்பு கொண்டவர்கள்.

ஸ்ரீ திருப்புகழ்ச்சாமி ஐயர் இராமநாதபுரம் சங்கீதச் சக்கர வர்த்தி பூச்சி ஸ்ரீநிவாச ஐயங்கார் அவர்கள் பால் இசை பயின்ற வர்கள். மாண்புமிக்க முத்துராமலிங்க சேதுபதி மன்னரிடம் அலுவல் செய்து வந்தார்.

இளமையிலிருந்தே முருகனிடம் ஆராக்காதலும். திருப்புகழில் அளவற்ற பற்றும் பூண்டவர். திருப்புகழ் என்ற திருமறையை யாண்டும் பரப்ப வேண்டும் என்ற கருத்துடையவராய் மதுரையைத் தனக்கு உறைவிடமாகக் கொண்டு ஐம்பது ஆண்டுகட்கு முன்னர் மதுரை ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் திருக்கோவில் தெற்காடி வீதியில் திருப்புகழ்ச் சபையை 1919ம் ஆண்டில் சித்தார்த்தி ஸு ஆடி மாதம் 18-ந் தேதி யன்று நிறுவினார்கள். நூற்றுக்கணக்கான மாண வர்கட்குச் சிறந்த பண் முறைப்படி திருப்புகழைப் பாட பயிற்சி யளித்தார்கள். திருச்செந்தூர், திருமலை, திருநெல்வேலி, ஐதராபாத் முதலிய பல ஊர்களில் திருப்புகழ் கோஷ்டியும்; விரிவுரையும் செய்து மக்களிடம் திருப்புகழ்ப் பற்றை வேரூன்றச் செய்தார்கள்.

சதா திருப்புகழைப் பாடுவதும்: திருப்புகழுக்கு உரை கூறுவதும் முருகவழிபாடு செய்வதுமாகவே தன் காலத்தைக் கழித்தார்.

ஒருநாள் இவருடைய கனவில் விடியற்காலையில் திருவண்ணாமலை கோபுரமும், அருணகிரியாருக்கு முருகன் குருவாக வந்து உப தேசித்த காட்சியும் தோன்றின. அந்தக் காட்சியை ஓவியமாக்கினார். அதற்குப் பின்னர் திருவண்ணாமலை சென்று தெரிசித்தார். தனது குருநாதருடைய அவதார ஸ்தலமாகிய திருவண்ணாமலைக்கு ஆண்டுதோறும் சென்று திருப்புகழ் கோஷ்டி செய்வார்.

மூன்றும் பிரகாரத்தில் கல்யாண மண்டபத்துக்கு அருகில் உள்ள அருணகிரியார் சமாதி மண்டபத்தை வழிபடுவார்.

## தந்தையாருடைய சந்திப்பு

அடியேனுடைய தந்தையார் திருமல்லையதாஸ் பாகவதர். காங்கேய நல்லூரில் திருப்புகழ் சபை நிறுவி எங்களுக்கெல்லாம் திருப் புகழைக் கற்றுத் தந்தார். சிறந்த முருகனடியார். உயர்ந்த ஒழுக்க முடையவர். முருகனையே குருநாதராகக் கொண்டு சகல கலைகளிலும் வல்லவராய், விரிவுரை புரியும் வித்தகராய் விளங்கினார். மகாபார தம், இராமாயணம், கந்தபுராணம் முதலிய புராணப் பிரசங்கம் செய்தும், பலருக்குச் சிவ தீட்சை செய்தும், கொல்லா விரதத்தை வற்புறுத்திக் கூறியும் பக்திப் பயிரை வளர்த்து வந்தார். சிலம் பல ரிடம் இன்மையால் இவர் யாரையும் குருவாக ஏற்கவில்லை.

ஒருசமயம் கார்த்திகை தீபப் பெருவிழாவிற்கு திருவண்ணுமலை சென்ருர். அங்கு திருப்புகழ் கோஷ்டி புரிந்து, திருப்புகழ் விரிவுரை செய்து கொண்டிருந்த ஸ்ரீ திருப்புகழ்ச்சாமி ஐயர் அவர்களை என் தந்தையார் தரிசித்தார். இவரிடம் சிறந்த அன்பு பூண்டார்.

காங்கேயநல்லூருக்கு வந்து எமது பிதா அவர்கள் அருணகிரி நாதரின் அவதாரம் போன்ற ஒரு மகான் திருவண்ணுமலையில் வந்தார். "அவருடைய பெருமை அளவிடற் கரியது" என்று எங்களிடம் புகழ்ந்து கூறினர். யாரையும் பாராட்டாத தந்தையார் மிகவும் பாராட்டியபடியால் அவரைத் தரிசிக்கவேண்டும் என்ற அவா அடியேனுக்குண்டாகியது.

## முதல் சந்திப்பு

அடுத்த ஆண்டு கார்த்திகை தீபத் திருவிழாவிற்கு எங்கள் தந்தையார் அடியேனையும் எங்கள் திருப்புகழ்ச்சபை மாணவர்களையும் அழைத்துக் கொண்டு திருவண்ணுமலை சென்ருர்.

அடியேன் முதன் முதலாக ஸ்ரீ திருப்புகழ்ச் சுவாமிகளைத் தரிசிக்கும்போது, அவர் அக்கினி மூலையில் திருப்புகழ் கோஷ்டியில் "கன கந்திரள்" திருப்புகழைப் பாடிக் கொண்டிருந்தார். அதற்கு விரிவுரை செய்தார். இத் திருப்புகழின் இறுதி அடியாகிய,

"மதியுங் கதிருந் தடவும்படி
உயர்கின்ற வனங்கள் பொருந்திய
வளமொன்று பரங்கிரி வந்தருள் பெருமாளே"

என்ற பகுதியைப் பாடி, மதியும் கதிரும் என்பது யோக நெறியில் சந்திர நாடி சூரிய நாடியைக் குறிப்பிடும்; திருப்பரங்குன்றம் மூலாதாரத்தலம் என்று கூறி தத்துவார்த்த விளக்கம் செய்தார். 45 ஆண்டுகளுக்கு முன் கேட்ட அந்த அமுத ஒலி இன்னும் சிறியேடைய செவியில் ரீங்காரம் செய்து கொண்டிருக்கிறது. சுவாமிகள் திருப்புகழ் பாடி வியாக்யானம் செய்யும் போது கண்ணீர் தாரை தாரையாகப் பெருகியோடும். தன்னை மறந்து பாடிப் பரவசமடைவார்.

## காங்கேயநல்லூர் வருகை

அடுத்த ஆண்டில் எங்கள் தந்தையார் திருப்புகழ்ச் சுவாமிகளிடம் சடக்கர மந்திர உபதேசம் பெற்றுக்கொண்டார். சதா குருநாதரையே நினைந்து நினைந்து உள்ளம் உருகுவார். குருநாதரிடமிருந்து கடிதம் வந்தால் அதனைப் பாதி படித்ததும் விம்மி விம்மியழுவார். படிக்கமுடியாது அடியேனிடம் கொடுத்து படிக்கச் சொல்லிக் கேட்பார். சமானமில்லாத குருபக்தியுடையவராய் எமது தந்தையார் விளங்கினர்.

ஒருசமயம் கார்த்திகை விழாவிற்குத் திருவண்ணுமலை வந்திருந்த சுவாமிகளை எங்கள் ஊர் காங்கேயநல்லூருக்குத் தந்தையார் அழைத்து வந்தார். அவருக்கு ராஜோபசாரம் செய்தார். மூன்று நாள் முருகன் கோயிலில் அருணகிரியார் சரித்திரத்தை திருப்புகழ் சுவாமிகள் விரிவுரை செய்தார். அந்த விரிவுரை தேன்மழை

பொழிந்தது போல் இருந்தது. அருணகிரியார் சோபுரத்திலிருந்து விழுந்தார் என்று கூறும்போது சுவாமிகள் கண்களில் நீர் ஆறுய்ப் பெருகியது. சபையில் இருந்த அத்தனைபேரும் உருகியழுதார்கள். சுவாமிகள் எமது பிதாவிடம் அளவில்லாத அன்பும் அருளும் உடையவராய் விளங்கினர். எளியேன் மீதும் மிகுந்த கருணையுடைய வராய்த் திகழ்ந்தார்.

## ஒரு அற்புதம்

காங்கேயநல்லூர் வேலூருக்கு 3 கல் தொலைவில் உள்ள முருகன் திருத்தலம். காங்கேயநல்லூருக்கு 20 கல் தொலைவில் உள்ள ஊர் திமிரி.

திமிரியில் வாழுகின்ற சிறந்த செம்மல் தருமலிங்க முதலியார்; எமது தமக்கையார் கமலாட்சியம்மையாரின் கணவர். அவர் சுவாமி களைத் தங்கள் திமிர் என்ற ஊருக்கு அழைத்துக்கொண்டு சென்றார். அப்போது தந்தையாருடன் அடியேனும் சென்றிருந்தேன். திமிரியில் சுவாமிகள் விரிவுரை புரிந்தார். மறுநாள் காலை சுவாமிகட்கு என் தமக்கையாரும், அத்தானும் பாத பூஜை செய்தார்கள். ஒரு தட்டில் பழங்கள் வெற்றிலை பாக்கு தேங்காய் ஐம்பது ரூபாய் வைத்து சுவாமிகளிடம் கொடுத்தார்கள்.

சுவாமிகள் "எனக்கு ஏன் பணம்" என்று சிறிது சீற்றத்துடன் பின்னே நிற்கின்ற என் தந்தையாரைப் பார்த்தார். தந்தையார் முத்து முத்தாக நீர் சிந்திய கண்களுடன் நின்றார். தந்தையார் அழுவதைக் கண்ட சுவாமிகள் சினம் மாறி தழுதழுத்த குரலில் "ஏன் அழுகின்றீர்? என்று வினவினர்" தந்தையார் "சுவாமி! இவருக்கு என் செல்வப் புதல்வியை, குழந்தையில்லாத காரணத் தால் மூன்றுந்தாரமாகக் கொடுத்தேன். திருமணமாகிப் பதினேழு ஆண்டுகள் சென்றன. காசி முதல் இராமேசுவரம் ஈருக எல்லாத் திருத்தலங்களிலும் சென்று இறைவனை வழிபட்டார்கள். மாதந் தோறும் ஒரு செவ்வாய்க்கிழமை திருவண்ணமலை சென்று மலைவலம் வந்து வழிபடுகின்றார்கள். மகப்பேறு கிடைக்கவில்லை இதுதான் எனக்குப் பெருங்கவலை என்று அழுது கொண்டே கூறினர்.

சுவாமிகள் ஆவேசம்" வந்தது போல் "சரி"என்று கூறி தட்டில் இருந்த இரு வாழைப் பழங்களை யெடுத்து என் தமக்கையா ரிடம் தந்து, அம்மா! இந்தப் பழங்களில் ஒன்றை நீ உண்பா யாக. மற்றொன்றை உன் கணவனரிடம் தந்து உண்ணச் செய் வாயாக. இந்த மாதம் மாதவிலக்கம் ஏற்படும். அடுத்த மாதம் மாதவிலக்கம் ஏற்படாது. உன் மணிவயிறு வாய்க்கும். ஆண் குழந்தை பிறக்கும்.அடுத்த கார்த்திகை தீபத்திற்கு நான் திருவண் ணமலை வரும்போது நீ குழந்தை யுடன் அங்கு வருக. வருந்தற்க" என்று கூறியருளினர். இவற்றை அடியேனும் அருகில் நின்று கேட்டுக்கொண்டிருந்தேன். பின்னர் சுவாமிகள் புறப்பட்டார்கள். காட்பாடி போய் ரயில் ஏறி திருப்பதிக்குச் சென்றார்கள். அடியே னையும் அழைத்துச் சென்றார்கள். படிவழி மலையேறி ஒரே நாளில் திருவேங்கட நாதரைத் தரிசித்து விட்டுத் திரும்பினோம். இந்த நிகழ்ச்சி நடந்தது கார்த்திகை மாதம். என் தமக்கையார் கார்த்தி கையில் மாதவிலக்கம் பெற்றார். மார்கழி மாதத்தில் மணிவயிறு

வாய்க்கப் பெற்ருர்கள். அடுத்த புரட்டாசி மாதத்தில் ஆண் மகவைப் பெற்ருர்கள். நித்தியானந்தன் என்று பெயர் சூட்டினுர்கள்.

அடுத்த கார்த்திகைப் பெருவிழாவில் 3 மாதக் குழந்தையுடன் திருவண்ணுமலைக்குச் சென்ருர்கள். அங்கு வழக்கம்போல் வந்துள்ள திருப்புகழ் சுவாமிகளை வடக்கு ரத வீதியில் அவர்கள் கட்டியுள்ள மடத்திற்கு அழைத்துப் பாத பூஜை செய்து, குழந்தையைத் திருவடியில் கிடத்திஞர்கள்.

சுவாமிகள் ஆசீர்வதித்து, ''அம்மா! இன்னும் உனக்கு மகப்பேறு உண்டாகும். இவனுக்கு ஒரு தம்பியும் பிறப்பான்'' என்று கூறியருளினுர். அந்தத் திருவாக்கின்படி எனது தமக்கையாருக்குப் பின்னர் ஆண் மகவும் பெண் மகவுகளும் பிறந்தன.

இத்தகைய உயர்ந்த வாக்கு சித்தியுடையவர் ஸ்ரீ திருப்புகழ்ச் சுவாமிகள். இந்த நிகழ்ச்சி மிகவும் அதிசயமானது.

## இன்னும் ஒரு அதிசயம்

எங்கள் தந்தையார் சிறியேனையழைத்துக் கொண்டு மதுரைக்குச் சென்ருர். அது பங்குனி மாதம். சுவாமிகளின் திருவடியில் வீழ்ந்து எனது பிதா கதறியழுதார்.

சுவாமிகள் ''ஏன் அழுகின்றீர்'' என்று பரிவுடன் கேட்டார்.

எனது பிதா ''குருநாதா'' அடியேன் ஏழை. முருகனிடம் உத்தரவு பெற்று, என் பிறப்பிடமாகிய காங்கேயநல்லூரில் முருகன் திருக்கோவிலில் இராஜ கோபுரம் கட்ட முயன்றேன். 5 லட்சம் செங்கல் கடன் வாங்கி ஆயத்தமும் செய்தேன். ஐந்து ஆண்டுகள் ஆகியும் அந்தக் கடனும் தீரவில்லை, கோபுரமும் கட்டப்பெறவில்லை. நகரத்தார் இருக்கும் செட்டி நாடுகளில் தங்கள் நண்பர்கட்குக் கடிதம் கொடுங்கள். அடியேன் சென்று கந்தபுராணம், பாரதம், இராமாயணம் பிரசங்கம் செய்து, பொருள் ஈட்டித் திருப்பணி செய்வேன்'' என்ருர்.

சுவாமிகள் புன்னகை புரிந்தார். ''நீர் போய் ஸ்ரீ மீனுக்ஷிசுந்தரேஸ்வரரைத் தெரிசனம் செய்துவிட்டு வாரும்'' என்ருர். அதுபடியே தந்தையார் என்னுடன் ஆலவாயண்ணலையும், அங்கயற்கண்ணம்மையையும் போற்றி செய்துவிட்டு குருநாதர்பால் சென்ருர்.

சுவாமிகள் தந்தையாரைக் கருணையுடன் பார்த்து, கோபுரத்துக்குப் பணம் உங்கள் ஊருக்கு அருகிலேயே கிடைக்கும். செட்டி நாட்டுக்குப் போக வேண்டாம்.

ஒரே ஒரு ரூபாயை மூலதனமாக வைத்துத் தொடங்கும். பணம் கிறுகிறு என்று வரும். ஆறு மாதங்களில் ராஜகோபுரத் திருப்பணி முற்றுப் பெறும். அத்திருப்பணி நடக்கும்போது ஒரு உயிருக்கு ஆபத்து நிகழும். அப்போது இந்தத் திருநீற்றையிடும், ஆபத்து விலகும்'' என்று கூறி ஒரு சிறு விபூதிப் பையை வழங்கினுர்.

தந்தையாருக்குச் சுவாமிகளின் வாக்கு என்ருல், அது வேத மொழிதான். ஒரு சிறிதும் அதில் சந்தேகம் கிடையாது.

அதற்கு மறுநாள் கோயிலில் சுவாமிகள் நீராடிக் கொண்டிருந்தார். வாளியில் ஆடைகள் இருந்தன. ''அவற்றைத் தோய்த்துக்

கொடு" என்று பிதா என்னைக் கண்களால் ஏவினர், அடியேன் துணியைத் தொடச் சென்றேன்.

சுவாமிகள், "இதனை நீ தோய்க்காதே. அதோ அந்த வாளியில் உள்ள என் ஆடைகளைத் தோய்த்துக் கொடு. இது என் அன்னையின் ஆடை. இதனை நான்தான் தோய்க்க வேணும்" என்றார்கள். சுவாமிகள் தாயாருடைய வெள்ளைப் புடவைகளைத் தாமே தோய்த்து உதவும் பண்பாடு உடையவர் என்பது விளங்கிற்று.

தந்தையார் குருநாதரிடம் விடைபெற்றுக் கொண்டு காங்கேய நல்லூர் சேர்ந்தார். சித்திரை மாதம் 14ம் தேதி கால் நட்டு கோபுர வேலையைத் தொடங்கினர். எங்கள் ஊருக்கு அண்மையில் உள்ள ஊர்களில் சென்று இரவில் பிரசங்கம் செய்வார். அதில் வரும் ஊதியத்தைக் கொணர்ந்து கூலியாட்களுக்குத் தருவார். சிறிது கடனும் வாங்குவார். 40 நாளில் ராஜகோபுரம் கட்டிட வேலை முடிவு பெற்றது.

ஐப்பசி மாதம் பூசு வேலை. சுதை வேலை தொடங்கப் பெற்றது. ஐந்து நிலைக் கோபுரம். ஒரு நாள் மாலை 3 மணிக்கு உச்சியில் கோபுரத்தின் மகர நாசி பூசு வேலை நடந்துகொண்டிருந்தது. சிற்பிகளுக்குச் சிற்றுண்டி தர என் தம்பி ஸ்ரீசைலவாசன் கோபுரத்தின் மீது சென்றான். எனது தமையனர் அவனைப் பார்த்து "நேரமாயிற்று; இன்று அப்பா வேலம் என்ற ஊரில் விரிவுரை செய்யப்போக வேண்டும். நீ அப்பாவுடன் செல்லுக" என்றார்.

என் தம்பி திரும்புகின்றபோது உச்சியிலிருந்து தவறி விழுந்து விட்டான். மிகவுயர்ந்த கோபுரத்துச்சியிலிருந்து உருண்டு நினைவின்றி நிலத்தில் வீழ்ந்தான். அங்கு சுண்ணும்பு அரைக்கின்ற பணியாளர்கள் அவனையேந்திக்கொண்டு வீட்டில் சேர்த்தார்கள். இதைக் கண்ட ஊரவர் ஓ என்று கதறினர்கள். எனது தமக்கையார் மகன் கோதண்டபாணி சென்று மேல் மாடியில் சிறிது கண்ணயர்ந்துள்ள தந்தையாரிடம் "தாத்தா" மாமா கோபுரத்துச்சியிலிருந்து விழுந்துவிட்டார்" என்று அழுதுகொண்டே கூறினன்.

தந்தை பதறிக்கொண்டு கீழே இறங்கி வந்தார். நினைவின்றி — அசைவின்றி கிடந்த மைந்தனைக் கண்டார். உடனே அடியேனைப் பார்த்து "அன்று திருப்புகழ்ச் சுவாமிகள் தந்த திருநீற்றை எடுத்து வா" என்றார். பீரோவில் இருந்த அந்தத் திருநீற்றுப் பையைக் கொணர்ந்து பிதாவிடம் தந்தேன். தந்தையார் வாங்கி தம்பியின் நெற்றியில் இட்டு சடக்கர மந்திரத்தைக் கூறி உடம்பில் பூசினர். அவன் கண்விழித்தான். தந்தையார் "மகனே! எப்படியுளது?" என்று கேட்டார். "அப்பா எனக்கு ஒன்றுமில்லை" என்றான்.

தந்தையார் "முருகா! நான் உன் வேலையாகப் போகின்றேன். நீ என் வேலையைப் பார்த்துக்கொள்" என்று கூறிவிட்டு என்னை அழைத்துக் கொண்டு புறப்பட்டார். காட்பாடியில் ரயில் ஏறி வாலாஜா ரோட்டில் இறங்கி வேலம் என்ற ஊருக்குச் சென்றார். அன்று மாலை அவர் ஒன்றும் அருந்தவில்லை—புத்திர சோகத்தால் வாடியிருந்தார். மகன் பிழைப்பானே? பிழைக்கமாட்டானே? முருகன் திருப்பணி செய்கின்ற தனக்கு இப்படி ஒரு சம்பவம் நிகழுமானல் முருகனுக்கு அல்லவா குறை நேரும் என்று எண்ணி வருந்தினர்.

அன்று நிகழஇருந்த நிகழ்ச்சி இராமதாசர் சரிதை. தந்தையார் அதை மாற்றி அருணகிரியார் சரித்திரத்தைக் கூறினர். அருணகிரி நாதர் கோபுரத்திலிருந்து வீழ்ந்தார் என்றுகூறும்போது தந்தையார் தன் மகனை நினைந்து அழுதார். அடுத்த நாள் காலை காங்கேய நல்லூர் வந்து மகனைப் பார்த்து அவன் எந்த ஊறும் இன்றி இருப் பதை அறிந்து ஆறுதல் அடைந்தார்.

இவ்வாறு பின்னே வருவன முன்னே அறிந்து கூறி அருள் நீறும் தந்த திருப்புகழ்ச் சுவாமிகளின் தவ வலிமையைக் கூற யாராலும் முடியாது.

## மூன்றாவது அதிசயம்:

எங்கள் ஊரில் தந்தையார் இராஜகோபுரம் புதுக்கி, கும்பாபி ஷேகம் செய்யலானர். அந்தக் கும்பாஷேகப் பத்திரிகையின் அடியில் சுவாமிகள் பேரை மட்டுமே பொறித்தார். சுவாமிகள் கும்பாபிஷே கத்திற்கு எழுந்தருளினர். முன்னின்று கும்பாபிஷேகத்தை நடத்தி யருளினர்.

காங்கேயநல்லூரில் தங்கியிருந்தபோது ஊரவர் சுவாமிகளைப் பார்த்து, இந்தவூர் கிராம தேவதை செல்லியம்மை கோயிலுக்கு நீங்கள் வரவேண்டும் என்று அழைத்தார்கள்.

''சுவாமிகள் பின்னப்பட்டிருக்கின்ற அதனை நான் ஏன் பார்க்க வேண்டும்?'' என்றார். ஊரவர் போய்ப் பார்த்தார்கள். அம்பிகை யின் மூக்கில் துவரம் பருப்பு அளவு பின்னம் இருந்தது. தினம் கோவிலுக்குப் போகின்றவர்கட்கே தெரியாத ஒன்றை, கோயில் இருக்கும் திசையே தெரியாத சுவாமிகள் கூறினர். இத்தகைய அரிய ஆற்றல் படைத்தவர் சுவாமிகள்.

சுவாமிகட்கு ஆண்மகவு பிறந்தது. சுவாமிகள் எனது பிதாவுக் குக் கடிதம் எழுதினர். ஆண்மகவு பிறந்தது என்று எழுதவில்லை. **''கிருபானந்தவாரிக்குத் தம்பி பிறந்திருக்கின்றான்''** என்று எழுதினர்.

மற்றொரு சமயம் தந்தையாருக்குக் கடிதம் எழுதினர். ''உங்கள் வீட்டிற்கு அருகில் உள்ள நிலங்களை நீங்கள் வாங்குவீர்கள்—வீடு நிரம்ப நெல் குவிந்திருக்கும் அதை நான் வந்து பார்ப்பேன்'' என்ற வாசகங்கள் அதில் இருந்தன. இதை அவர் எழுதும்போது ஒரு உள்ளங்கை நிலமும் கிடையாது. நிலம் வாங்கக் கூடிய எண்ணமோ இயல்போ கிடையாது.

சுவாமிகளின் திருவாக்கின்படி தந்தையார், வீட்டுக்கு அருகில் உள்ள நிலங்களை வாங்கினர்.

ஒரு சமயம் அருணகிரியார் ஆராதனை விழாவுக்கு சுவாமிகள் காங்கேயநல்லூருக்கு எழுந்தருளினர். தன் கழுத்தில் இருந்த தங்க கௌரிசங்கர் உருத்திராட்ச மாலையைக் கழற்றி அருணகிரியாருக் குச் சாத்திவிட்டார். அன்று அடியேனுக்கும் என் தமையனுருக் கும் திருக்கோயிலில் சடக்கர மந்திர உபதேசம் புரிந்தருளினர்.

அடியேன் சில தினங்கள் மட்டுமே திருப்புகழ்ப் பாடங் கேட்டேன். ''எல்லாம் உனக்கு வரும்'' என்று கூறி ஆசீர்வதித்தார். அந்த மகாஞான முனிவர் திருவாக்கின்படி அடியேனுக்குத் திருப்புக ழில் சிறிது ஞானம் உண்டாயிற்று. சுவாமிகள் வளைகுளம் என்ற

ஊரில் விரிவுரைக்குச் சென்றிருந்தார். அடியேனும், அடியேனுடைய தந்தையாரும் சென்றிருந்தோம்.

அந்த ஊர் திருத்தணிக்குக் கிழக்கே 4 கல் தொலைவில் உள்ளது. 10 ஊர் ஜனங்கள் சுவாமிகளின் விரிவுரை கேட்கத் திரளாகக் குழுமியிருந்தனர். சுவாமிகட்கு உணவுக் கோளாறினால் மேடை மீது நின்றவுடன் வயிற்றுவலி வந்து பேசமுடியாமல் இறங்கிவிட்டார். பின்னர் அம்மேடைமீது எனது தந்தையார் ஏறிப் பேசத்தொடங்கினார். கோடையிடி போல் பேசும் பெருந்திறல் உடைய தந்தையார், "என் குருநாதருடைய மேடை மீது எனக்குப் பேச நா எழவில்லை" என்று கூறி இறங்கிவிட்டார். ஜனங்களுக்குப் பெரிய ஏமாற்றம்.

என் பிதா என்னையழைத்து "நீ பேசு" என்று பணித்தார். சிறியேன் "இளங்கன்று பயமறியாது" என்ற முதுமொழிப்படி ஏறி துணிச்சலாக திருப்புகழை மளமள என்று கூறி விரிவுரை செய்தேன். இதனை மறைவில் இருந்து சுவாமிகள் செவிமடுத்துச் சிந்தை மகிழ்ந்தார். 2 மணி நேரம் பொறுத்து அவர்கள் வந்து மேடைமீது ஏறி அழுதார்.

"மகாஜனங்களே! நானன்றித் திருப்புகழின் தத்துவார்த்தங்களை எனக்குப் பின் யார் பேசப்போகின்றார்கள். இவை எவருக்குத்தான் சொந்தமாகுமோ என்று கவலை கொண்டிருந்தேன். இச் சிறுவன் மிக அழகாகப் பேசி என் உள்ளத்தை உருக்கி உவகையூட்டினான். இவன் என் வாரிசு. என் உயிர் இன்றே பிரிந்தாலும் குறையில்லை. இவனால் திருப்புகழ் மாட்சியுறும்" என்று கண்ணீர் சொரிந்து கொண்டே கூறினார்.

எங்கள் குருநாதராகிய மதுரை திருப்புகழ்ச் சுவாமிகள் சீலமும் கோலமும் உடையவராய், ஞாலமெல்லாம் சுற்றி, வெண்கல மணி போன்ற கணீர் என்ற குரலுடன் திருப்புகழைப்பாடி வியாக்யானம் புரிவார். கந்தர் ஷஷ்டி விழாவைப் பெரும் பொருள் செலவழித்து அதி விமரிசையாகக் கொண்டாடுவார். தான் திருக்கோயில்களின் விழாக்களில் இரவு முழுவதும் கோஷ்டி செய்து அதன்மூலம் வரும் செம்பொற் காசுகளை சஷ்டி விழாவுக்குச் செலவழிப்பார்.

ஒரு சமயம் திருச்செந்தூரில் அடியேன் சுவாமிகளுடன் இருந்தேன். தனிமையில் இனிமையாக என்னுடன் கந்தபுராணத்திலே ஜயந்தன் கனவு காண் படலத்தைச் சொல்லி கண்ணீர் விட்டு அழுதார்.

அப்போது அவர் கூறிய பாடல் இது.

வீறு கேதனம் வச்சிரம் அங்குசம் விசிகம்
மாறிலாத வேல் அபயமே வலம் இடம் வரதம்
ஏறு பங்கயம்; மணிமழு தண்டு வில்லிசைந்த
ஆறிரண்டு கை அறுமுகங் கொண்டு வேள் அடைந்தான்.

காலமுழுவதும் தனக்கென்று வாழாமல் திருப்புகழுக்காகவே வாழ்ந்தவர். மாணவர்களிடம் தளராத தயவு பூண்டவர். தனக்கென்று ஒன்றும் சேர்த்து வைத்துக்கொள்ளாமல் வெள்ளையுடையுடுத்தி சந்நியாசியாக, ஜனகரைப்போல் இல்லற ஞானியாக வாழ்ந்தவர். இப்பெருமான் 1936ல்—தாது வருஷம் ஆனி மாதம் முருகன் திருவடி சேர்ந்தார்.




## எமது வெளியீடுகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | திருப்புகழ் (முழுவதும்) மூலம் மட்டும் | ரூ. | 6-00 |
| 2. | கந்தரலங்காரம் (விரிவுரையுடன்) | ரூ. | 3-[illegible] |
| 3. | திருப்புகழ்த் திரட்டு | | 1-50 |
| 4. | திருப்புகழ் விரிவுரை—முதல் தொகுதி (விநாயகர் பாடல்களும், முதற்படைவீடு திருப்பரங்குன்றப் பாடல்களும்) | ரூ. | 2-50 |
| 5. | திருப்புகழ் விரிவுரை—இரண்டாம் தொகுதி (இரண்டாம் படைவீடு—திருச்செந்தூர்) | ரூ. | 5-00 |
| 6. | திருப்புகழ் விரிவுரை—மூன்றாவது தொகுதி (மூன்றாவது படைவீடு—பழநி) | ரூ. | 5-00 |
| 7. | திருப்புகழ் விரிவுரை—நான்காம் தொகுதி (நான்காவது படைவீடு—சுவாமிமலை) | ரூ. | 2-50 |
| 8. | திருப்புகழ் விரிவுரை—ஐந்தாம் தொகுதி குன்றுதோறாடல் முதற்பாகம் | ரூ. | 5-00 |
| 9. | திருப்புகழ் விரிவுரை—ஆறும் தொகுதி (குன்றுதோறாடல் இரண்டாவது பகுதியும், பழமுதிர் சோலையும்) | ரூ. | 5-00 |
| 10. | மகாபாரதம், வியாசபாரதச் சுருக்கம் (வசனம்) வில்லிபுத்தூரார் பாடல்களுடன் கூடியது | ரூ. | 5-00 |
| 11. | கந்தரநுபூதி (உரையுடன்) | ரூ. | 2-00 |
| 12. | அறிவுரையமுது (கட்டுரைகள்) | ரூ. | 0-50 |
| 13. | திருவாசகத்தேன் ( ,, ) | ரூ. | 0-50 |
| 14. | செந்தமிழ் இன்பம் ( ,, ) | ரூ. | 0-50 |
| 15. | சிந்தனைத்தேன் ( ,, ) | ரூ. | 0-50 |
| 16. | மணிமொழிகள் | ரூ. | 0-50 |

---



---